# நாகரும் மாயன் வரலாறு



**மாயன்**

யுக்தானின் ஸ்பானிய ஆக்கிரமிப் மாயா நாகரிகம் என்பது பண்டைக்கால மத்திய அமெரிக்க நாகரீகம் ஆகும். இப்பகுதி, தற்காலத்தில் இருக்கும் மெக்சிகோ , குவாத்தமாலா, ஹொண்டுராஸ் போன்ற நாடுகள் விரவியிருக்கும் மத்திய அமெரிக்கப் பகுதிகளிளை உள்ளடக்கியது. கொலம்பசுக்கு முந்தியகால அமெரிக்காவின் முழு வளர்ச்சி பெற்ற ஒரே எழுத்து மொழியைக் கொண்டிருந்தது இந்த நாகரீகத்தைச் சேர்ந்த மக்களே.

**கி.மு. 2600 வாக்கில் மாயன் நாகரிகம் தோன்றியது.**

மாயன் இனத்தவர் கணிதம், எழுத்துமுறை , வானியல் போன்ற துறைகளிலெல்லாம் மேம்பட்டிருந்தனர். மிக விசாலமான, நுனுக்கமான கட்டிடக்கலை மாயன் இனத்தவரின் சிறப்பாகும். கி.பி. 150 வாக்கில் மாயன் நாகரிகம் உச்சத்தை அடைந்தது. அதன்பின் பல்வேறு காரணங்களால் அது சீரழியத் தொடுங்கியது.

ஸ்பெயின் நாட்டவர் குடியேற்றம், விசித்திரமான மூட நம்பிக்கைகள், பங்காளிச் சண்டைகள் மற்றும் முறையற்ற விவசாயம் போன்றவை மாயன் கலாச்சார பேரழிவிற்கு காரணிகளாக இருக்கலாம் என நிபுணர்கள் கருதுகிறார்கள். தற்காலத்தில் சுமார் ஆறு இலட்சம் மாயன் இனத்தவர் மெக்சிகோ, குவாத்தமாலா போன்ற நாடுகளில் இருப்பதாக அறியப் படுகிறது.

**மாயன் கணிதம்.**

மாயர் எண் முறைமை 20 அடிமான (base-20) எண் முறையை மாயன்கள் பயன்படுத்தினர். மாயன்களின் கணிதத் திறமைக்கு சான்று அவர்களின் பூஜ்ஜியம் பயன்பாட்டு முறையாகும்{{fact}}.

மிக வளர்ச்சியடைந்ததாகக் கருதப்படும் கிரேக்க நாகரிகங்கள் கூட பூஜ்ஜியம் பயன்பாட்டுமுறையை அராபியர்களிடம் இருந்தே அறிந்து கொண்டார்கள். மாயன்கள் எண்களை குறிப்பிட மிக எளிமையான அதே சமயத்தில் மிகப் பெரிய எண்களைக் கூட எழுதவல்ல ஒரு குறியீட்டு முறையைக் கையாண்டார்கள்.

இக்குறியீட்டு முறை ஒரு "_" மாதிரியான கோடு ஒரு புள்ளி ஒரு நீள்வட்டக் குறி ஆகியவற்றை மட்டுமே உள்ளடக்கியது.

மாயன் கட்டிடக் கலை அமெரிக்காவின் பூர்வ குடிகளில் கட்டிடக்கலையில் மிகச் சிறந்து விளங்கியவர்கள் மாயன்கள் என்று சொன்னால் அது மிகையாகது.

நவீன வரலாறு , தொல்லியல் மற்றும் சமூகவியல் ஆராய்ச்சியாளர்களுக்கு மாயன் கலாச்சாரத்தில் ஆர்வம் ஏற்பட்டதில் சிதிலமடைந்த மாயன் நகரங்களும் கட்டிடங்களும் பெரும் பங்காற்றியிருக்கின்றன.

மற்ற தொல் நாகரிகங்களைப் போல் அல்லாமல், மாயன்கள் இரும்பு போன்ற உலோகங்கள் மற்றும் சக்கரங்களைப் பயன் படுத்தாமலயே மிகப் பெரிய மத சடங்குகளுக்கான இடங்களையும், பிரமிடுகளையும் இருப்பிடங்களையும் கட்டியுள்ளனர். மிக நுணுக்கமான வேலைப்பாடுகள் நிறைந்த சிற்பங்களையும் அவர்களின் கலாச்சார சின்னங்களாகக் காணலாம்.

மாயன் வானியல் மற்றைய பெரு நாகரிகங்களைப் போல் மாயன்களும் வானியலில் வல்லமை பெற்றிருந்தனர். அவர்கள் சூரியன் , சந்திரன், புதன் , சுக்கிரன்போன்றவற்றின் சுழற்சி முறைகளை வெகுவாக அவதானித்து ஆவணப்படுத்தியிருந்தனர்.

சந்திர மற்றும் சூரிய கிரகணங்களை முன்கூட்டியே கணக்கீட்டுத் தீர்மனிக்கும் அளவிற்கு திறன் பெற்றிருந்தனர். சடங்குகளில் அதீத நம்பிக்கை பெற்றிருந்த மாயன்கள் வானியல் நிகழ்ச்சிகளை அடியோட்டியே சடங்குகளை நடத்தினர்.

ட்ரெடெக்ஸ் எனப்படும் மாயன் பஞ்சாங்கக் குறிப்பேட்டிலிருந்து இதற்கான ஆதாரங்கள் பெறப்படுகின்றன. மாயன் நம்பிக்கைகள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய நாகரிகம் என்பதற்கேற்ப மாயன்கள் பல்வேறு மத சடங்குகளையும் நம்பிக்கைகளையும் கொண்டிருந்தனர்.

ஒவ்வொரு ஆண்டும் ஒரு முறை சிற்றரசர்கள் அவர்களுடைய கடவுளிடம் பேசி ஆலோசனை பெறும் ஒரு சடங்கை நடத்துவர்.

இலக்கியம்/நூல்கள் ஹைரோகிளிப்ஸ் என ஆங்கிலத்தில் அழைக்கப்படும் படஎழுத்து முறையை மாயன்கள் பயன்படுத்தினர். கல்வெட்டுக்கள் சிற்பங்கள் போன்றவற்றில் எழுதியது மட்டுமில்லாமல், ஒருவகையான புத்தகம் தயாரிக்கும் முறையையும் அவர்கள் பயன்படுத்தி வந்தனர். இவ்வாறு பல புத்தகங்களை அவர்கள் எழுதியிருக்கலாம் எனக் கருதப் படுகிறது. ஸ்பானிய ஏகாதிபத்தியத்துடன் வந்த அடிப்படைவாத கிருத்துவர்கள் பல மாயன் நூல்களை அழித்துவிட்டார்கள். இதில் தப்பியவை நான்கே நான்கு நூல்கள் தாம்.

**வீழ்ச்சி**

இவ்வளவு வளமையாக ஓங்கி செழித்து வளர்ந்த நாகரிகம் ஏறக்குறைய புல், பூண்டு இல்லாமல் போய்விட்டது. அதற்கான காரணத்தை அறிஞர்கள் இன்னும் அறுதியிட்டுக் கூறவில்லை. இவையாக இருக்கலாம் எனக் கருதப்படும் சிலவற்றில் முக்கியமானது, அண்டை நாடுகளுக்கிடையே அடிக்கடி ஏற்பட்ட பங்காளிச் சண்டைகள், காடுகளை அழித்து அவர்கள் நடத்திய விவசாயம் வெகு காலம் தாக்குப் பிடிக்கவில்லை, ஸ்பானிய குடியேற்றங்களுடன் வந்த அம்மை மற்றும் காலரா போன்ற வியாதிகள் பெருவாரியான மாயன்களை மிகக் குறுகிய காலத்தில் அழித்திருக்கலாம். ஆனால் இவையெல்லாம் தாண்டி சுமார் 6 இலட்சம் மாயன்கள் தற்காலத்திலும் மெக்ஸிகோ, குவதிமாலா போன்ற நாடுகளில் வசிக்கிறார்கள்.

**கள்ளரும் நாகரும்**



**மாயா இன மக்கள், இந்திய நாகர்கள் !!!**

மாயா நாகரீகம் மத்திய அமெரிக்க நாடுகளான மெக்ஸிகோ, ஹான்டுராஸ், குவாடிமாலா, பெலிஸ் ஆகிய நாடுகளில் பரவியுள்ளது. யார் இந்த மாயா இன மக்கள்? இவர்கள் எங்கிருந்து வந்து தென் அமெரிக்காவில் நுழைந்தனர்? இது போன்ற பல கேள்விகளுக்கு இன்னும் எல்லோரும் ஏற்கக்கூடிய பதில்கள் கிடைக்கவில்லை. மாயா நாகரீகம் மர்மங்களும் புதிர்களும் நிறைந்ததாகவே நீடிக்கிறது. ஆனால் இந்துக்களின் கலியுகம் துவங்கும் ஆண்டை ஒட்டியே இவர்கள் ஆண்டும் துவங்குவதால் ஓரளவுக்கு புதிரை விடுவிக்க முடிகிறது. இவர்களுடைய தடயங்களும் சின்னங்களும் கி.மு.2600 முதல் கி.பி.1500 வரை கிடைக்கின்றன. ஆயினும் இவர்கள் காலக் கணக்கீடு கி.மு. ஆகஸ்ட் 11, 3114-ஆம் ஆண்டு துவங்குகிறது. நமது கலியுகம் கி.மு 3102 ல் துவங்குகிறது. உலகில் வேறு யாரும் இப்படி நெருக்கமாக ஆண்டுத் துவக்கத்தைச் சொல்லவில்லை!

அற்புதமான துல்லியமான காலண்டர்கள், வான சாத்திரக் கணக்குகள், பிரம்மாண்டமான கோவில்கள், தங்கம், பச்சைக் கல் நகைகள், புத்தகங்கள் ஆகியன இவர்களின் சிறப்பு அம்சங்கள். 1500ம் ஆண்டுகளில் இவர்களுடைய செல்வத்தைக் கொள்ளை அடித்து இவர்களை கிறிஸ்தவர்களாக்க முயன்ற ஸ்பெயின் தேசத்து ஆட்கள், மாயா இன மக்களை ஈவு இரக்கமின்றி படுகொலை செய்தனர். தங்கம், ஜேட் எனப்படும் பச்சைக் கல் நகைகளை ஸ்பெயினுக்குக் கொண்டு சென்றனர். அருமையான மாயா நூலகங்களைத் தீகிரையாக்கினர். நல்ல வேளையாக மாயா இனக் கோவில்கள் மிகப் பெரிய கோவில்கள் ஆதலால் அவைகளை ஒன்றும் செய்ய முடியவில்லை.

**நாகா- கிருஷ்ண பரமாத்மா மோதல்**

மஹா பாரத காலத்தில் அர்ஜுனனும் கிருஷ்ணனும் காடுகளை அழித்து நகரங்களை உண்டாக்கி மக்களைக் குடியமர்த்தும் நல்ல எண்ணத்தோடு பெரிய காடுகளை எரித்தனர். காடுகளில் வாழ்ந்த பழங்குடி நாகா இன மக்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர். ஆயினும் அர்ஜுனனும் கண்ணனும் தன் போக்கில் காடுகளை எரிக்கவே நிறைய பேர் இறந்தனர். இது தவிர காளீயன் என்னும் நாகர் தலைவர் இருந்த இடத்தில் மாடு மேய்க்கச் சென்ற இடையர்களுக்கும் காளீயனுக்கும் மோதல் வலுக்கவே அவனையும் கண்ணன் கொன்றான். இந்த மேய்ச்சல் நிலத் தகராறை பிற்கால புராண ஆசிரியர்கள் காளீயன் என்னும் **பாம்பைக்** கொன்றான் என்று கதை கட்டி விட்டனர். உண்மையில் காளியனும் ஒரு மனிதனே. அவர்கள் நாகர்/ பாம்பு சின்னத்தை அணிந்ததால் நாகர்கள் எனப்பட்டனர். பழங்காலத்தில்

மக்கள் தங்களை இனம் காண கரடி (ஜாம்பவான்), கழுகு (ஜடாயு), குரங்கு (ஹனுமான்), பாம்பு (நாகர்) சின்னங்களை அணிவது வழக்கம். காலப் போக்கில் புராணக் கதை சொல்லுவோர் சுவை ஊட்டுவதற்காக இப்படி மிருகங்களின் பெயர்களை உண்மை என்று சொல்லிவிட்டார்கள்.

யாதவர்கள் மீதும் பாண்டவர்கள் மீதும் கோபம் கொண்ட நாகர்கள் பழிவாங்குவதற்காக ஒரு தருணத்தை எதிர் பார்த்துக் காத்திருந்தனர். மய தானவன் என்ற ஒரு நாகர் தலைவன் மட்டும் அர்ஜுனன் கிருஷ்ணர் தரப்பில் இருந்தான்.அவனைக் கானகத் தீயிலிருந்து மீட்டதால் பாண்டவர்களுக்கு உலகம் வியக்கும் அரண்மனையைக் கட்டித் தந்தான். மஹாபாரத யுத்தம் முடிந்தபின், கிருஷ்ணன் ஒரு வேடனின் அம்புக்குப் பலியானான். பாண்டவ சகோதரர் ஐவரும் பழைய கால வழக்கப்படி வடக்கு நோக்கிச் சென்று பாத யாத்திரை செய்து உயிர்த் தியாகம் செய்தனர். அர்ஜுனனின் பெயரன் பரீக்ஷித் ஆட்சிக்கு வந்தான்.

பரீடசித் மன்னன் காட்டுக்கு வேட்டை ஆடச் சென்றபோது சமீக என்ற முனிவரை அவமானப் படுத்தவே அவர் இன்னும் ஒரே வாரத்தில் நீ ஒரு நாகர் கையால் ( **பாம்பு கடித்து** ) இறப்பாய் என்று சாபமிட்டார். அவருடைய நாகா இன நண்பர் தட்சகனுக்கு இந்தப் பணியைக் கொடுத்தார். ஒரு வார காலத்துக்குள் எதுவும் நடந்துவிடக் கூடாது என்பதற்காக அரண்மனை "செக்யூரிட்டியை" அதிகப்படுத்தினார். ஆனால் தட்சகன் ஒரு பழக் கூடையில் ஒளிந்துகொண்டு அரண்மனைக்குள் புகுந்து பரீட்சித் மன்னனைப் படுகொலை செய்தான்.

மொகலாய சாம்ராஜ்யத்தில் அவுரங்கசீப்பினால் சிறைப் பிடிக்கப்பட்ட மாமன்னன் சிவாஜியும் இப்படி பழக்ககூடை மூலம்தான் சிறையிலிருந்து தப்பித்து இந்து சாம்ராஜ்யத்தை நிறுவினார்.

பரீட்சித் மன்னன் படுகொலை, பாண்டவ வம்சத்துக்கு ஒரு களங்கமாக அமைந்தது. உடனே மன்னனின் மகன் ஜனமேஜயன் நாகர்களைக் கண்ட இடத்தில் கொல்லுமாறு உத்தரவிட்டான். இந்திரா காந்தியை ஒரு சீக்கியர் கொன்றதற்காக டில்லியில் இரவோடிரவாக ஆயிரக் கணக்கான சீக்கியர்களைக் கொன்றது போல. இந்த நாகர் படுகொலை மக்களுக்கு பெரிய கவலையைத் தந்தது.

**பிராமணர் சமாதான உடன்பாடு.**

அந்தக் காலத்தில் கலப்புத் திருமணம் நிறைய நடந்தது. ஜரத்காரு என்ற ஒரு பிராமண ரிஷி / முனிவர் ஒரு நாக இனப் பெண்ணை மணந்து கொண்டார். அகத்தியர் வழியில் பிறந்த பிற்கால அகத்திய ரிஷி கம்போடியாவில் உள்ள யசோவதி என்ற நாக மங்கையை மணந்தது போல. பீலிவளை என்னும் நாக இன அழகியை சோழன் கிள்ளி வளவன் மணந்தது போல.

அந்தப் பிராமண முனி ஜரத்காருவுக்கு ஆஸ்திக முனிவர் என்று ஒரு மகன் இருந்தார். அவருக்கு அரசாங்கத்தில் நல்ல செல்வாக்கு. ஆக அவரைத் தேர்ந்தெடுத்து சமாதான தூது அனுப்பினர். அவருடைய தூது வெற்றி பெற்றது. நாகர்கள் படுகொலை நிறுத்தப்பட்டது. அவர்களும் பாண்டவ வம்சத்தைத் தொடுவதில்லை என்று சபதம் செய்தனர்.

விந்தையிலும் விந்தை! 5000 ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்பட்ட இந்த சமாதான உடன்பாட்டை இன்றும் பிராமணர்கள் மூன்று வேளை சந்தியாவந்தனத்தில் ஒரு மந்திரமாக சொல்லுகிறார்கள் ( நர்மதாயை நம: என்னும் இந்த மந்திரம் நர்மதை நதிக்கரையில் நடந்த சர்ப்ப யாகத்தை நினைவு படுத்துகிறது) அந்த மந்திரத்தில் நாகர்கள், ஜரத்காரு, ஜனமேஜயன், ஆஸ்தீகர் ஆகிய அனைவரும் நினைவு கூறப்பட்டு புகழப் படுகின்றனர். உலகிலேயே மிகப் பழைய சமாதான உடன்பாடு இதுதான்!!

இதைத் தொடர்ந்து மாயா இன மக்கள் இந்தியாவிலிருந்து வெளியேறத் துவங்கினர். அவர்கள் புண்ய பாரத நாட்டை விட்டு வெளியேறிய தேதி ஆக்ஸ்ட் 11, கி.மு.3114 என்பதால் தான் அந்த தேதியை இன்றும் மத்திய அமெரிக்க கல்வெட்டுகளில் பொறிக்கின்றனர். இந்தியாவின் மீது அவ்வளவு நன்றி! ஜனமேஜயர் ஆட்சிக்கலத்தில் இது நடந்தது.

இந்துக்கள் கலியுகத்துக்கு முந்தைய காலம் பற்றித் தெளிவாகக் கூறுகின்றனர். ஆனால் மாயாக்கள் இதற்கு முன் எங்கேயிருந்தனர் என்பது பற்றி ஒன்றும் கூறவில்லை.

**அதிசய நாகா ஆடைகள்.**

சங்கத் தமிழ் இலக்கியத்திலும் மஹாபாரதத்திலும் நாகர்கள் தயாரிக்கும் அதிசய உடுப்புகள் பற்றியும் இரண்டு குறிப்புகள் கிடைக்கின்றன. அதியமான் நெடுமான் அஞ்சிக்கு நீல நாகன் என்பவன் கொடுத்த அற்புதமான ஒரு ஆடையை அவன் தான் அணியாமல் சிவ பெருமானுக்குச் சூட்டியதாக புலவர்கள் (சிறுபாஅண். 96-99) பாடுகின்றனர். இதே போல நிஷத நாட்டு மன்னனான நளனுக்கு கார்க்கோடகன் என்ற நாகர் இனத் தலைவர் ஒரு ஆடையைக் கொடுத்து அவன் மனைவிக்கு அடையாளம் தெரிய அதைப் போட்டுக் கொண்டால் போதும் என்கிறான். அதாவது நளனுக்கும் அவன் மனைவி தமயந்திக்கும் அந்த ஆடை பாற்றி முன்னரே தெரியும்.

நாகர்கள் பாம்புத்தோல் போன்ற மெல்லிய ஆடைகளை அணியும் நெசவாளர்கள். சங்க இலக்கியம் பல இடங்களில் பாம்புத் தோல் போன்ற மெல்லிய ஆடைகளைப் பற்றி (பொருநர். வரிகள்82/83, புறம்383) பேசுகிறது.

---

**கள்ளரும் நாகரும்**



கள்ளர்கள் நாகர் இனத்தவர் என்று அறிஞர் வி. கனகசபை பிள்ளை அவர்களும் நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களும் கூறுவர்.

**நாகர்- மாயா இன அற்புத ஒற்றுமைகள்.**

1. கலியுக துவக்கம் கி.மு 3102, மாயா ஆண்டு துவக்கம் கி.மு 3114.மாயா மக்களும்

2. இந்தியாவின் மணிப்பூர், நாகாலாந்து ஆகிய வடகிழக்கு மாநில மக்களும் உருவத்தில் ஒரே மாதிரியாக இருப்பர்.
3. பல்லவ, தென் கிழக்கு ஆசிய கட்டிடக்கலை அம்சங்களை தென், மத்திய அமெரிக்க மாயா கட்டிடங்களிலும் காணலாம்.
4. நாகர்கள் தான் மாயாக்கள் என்பதைச் சொல்லாமல் சொல்லுகிறது மாயா கட்டிடங்களில் காணப்படும் பாம்பு உருவங்கள்.
5. மயன் என்பவன் பெரிய கட்டிடக் கலை நிபுணன். இவன் பெயரில்தான் மாயா நாகரீகமே இருக்கிறது. பெயருக்கேற்றார் போல எங்கு நோகினும் கட்டிடம்தான்.

6. மதுரை நாயகர் கட்டிய மீனாட்சி கோவில் போன்ற கோவில்களிலும் வேதத்திலும் ஆயிரம் கால் மண்டபம் பற்றிக் கேள்விப் படுகிறோம். மெக்சிகோவில் யோகஸ்தான் தீபகற்பத்தில் கிஷன் இட்சா என்னும் இடத்தில் ஆயிரம்கால் மண்டபம் உள்ளது.

7. மாயாக்களும் இந்தியர்களும் ஒரே ஆடு புலி ஆட்டத்தை விளையாடுகின்றனர். இப்படி ஒரே விளையாட்டை இரண்டு இன மக்கள் தனித் தனியே கண்டுபிடிப்பது அபூர்வத்திலும் அபூர்வம்!

8. மாயாகள் கட்டமரத்தில் பயணம் செய்திருக்கலாம். இன்றும் மெக்சிகோவில் தமிழ் சொல்லான கட்டமரம் அதே பொருளில் பயன்படுத்தப்படுகிறது. அந்தக் கலத்தில் நடுக்கடலில் செல்லாமல் கடலோரமாகவே பயணம் செய்வார்கள்.
9. நாகர்கள் எந்தப் பாதையில் சென்றார்கள் என்பதும் தெளிவாகிவிட்டது. இலங்கை, தென்கிழக்கு ஆசிய நாடுகள்,மத்திய அமெரிக்கா என்று படிப்படியாகச் சென்றதால் இந்த நாடுகள் அனைத்தும் நாகலோகம், நாகத்தீவு என்று அழைக்கப்படுகின்றன. சிந்து நதி முகத் த்வாரத்தில் பாதாள என்ற துறைமுகம் இருந்ததை பழங்கால பயணிகள் எழுதிவைத்தனர். பலி முதலிய மன்னர்களை பாதாள லோகத்துக்கு அனுப்பியதாகக் கூறுவதன் பொருள் அவர்கள் கடல் வழியாக நாடு கடத்தப் பட்டனர் என்பதாகும்.
10. நாகர்களை வேதமும் பழைய இனமாக (பஞ்சவிம்ச பிராமணம் -9-4) குறிப்பிடும்.
11. சங்க இலக்கியமும் மஹாபாரதமும் நாகர்கள் செய்யும் அரிய வேலைப்பாடமைந்த ஆடைகளைக் குறிப்பிடுகின்றன.
12. சங்க இலக்கியத்தில் மட்டுமே இருபதுக்கும் மேலான நாகர்கள் பாடல்களை எட்டுக்கட்டி இருக்கிறார்கள்.
13. மஹாபாரத காலத்தில் அர்ஜுனன் இரண்டு நாகர் இனப் பெண்களை திருமணம் செய்துகொண்டா ன் உலூபி, சித்திராங்கதை. (தமிழ்நாட்டில் இவளை அல்லி ராணி என்று பாடுகின்றனர்).
14. இந்துமத நூலகள் கிருஷ்ணனை நாகர்களின் எதிரியாகவும் இந்திரனை நாகர்களின் நண்பனாகவும் சித்தரிக்கின்றன.
15. நாகர் இனப் பெண்களை எல்லோரும் மணந்தனர். அகத்தியர் வழியில் வந்த பிற்கால அகத்தியர் கம்போடியாவில் யசோவதி என்ற பெண்ணைக் கல்யாணம் செய்தார்.
15 A காவேரிப்பூம் பட்டினத்துப் பெருவணிகன் 'பந்தன்' நாகலேகம் சென்று நாககன்னிகையை மணந்து பொற்படாமும், கருநெல்லிக் கனியும் பெற்று வந்ததாகப் பந்தநந்தாதியில் காணப்படுகிறது. பொற்படாம் போர்த்துக் கொண்டோருக்கு இளமை மறாமையும் கருநெல்லிக்கனி யுண்டார்க்கு நீண்ட ஆயுள் பெருகுமாம்
15 B நாக நாட்டில் நீதி நெறி தவறாது நல்லாட்சி நடத்திய வளைவணன் என்பானுக்கும் அவன் மனையாள் வாசமயிலை என்பாளுக்கும் பிறந்த அரசகுமாரி பீலிவளை. நெடுமுடிக்கிள்ளி காதல் வயப்பட்டு பீலிவளையை மனந்துகொண்டான். இவர்களின் மகனே திரையன்
16. கிருஷ்ணர் இரண்டு முறை நாகர்களுடன் மோதினார்: காண்டவ வனத்தை எரித்தார், காளீயன் என்ற நாகர் இனத் தலவனைக் கொன்றார்.

17. அர்ஜுனனின் பெயரான பரீட்சித்தை நாகர்கள் படுகொலை செய்ததால் நாகர்கள் வெளிநாட்டில் குடியேற நேரிட்டது.

18. ஜனமேஜயன் துவக்கிய நாகர் ஒழிப்பு இயக்கத்தை ஆஸ்தீகர் என்ற பிராமண ரிஷி ஒரு சமாதான உடன்பாடு மூலம் நிறுத்தினார்.

19. நர்மதை நதிக் கரையில் மஹிஸ்மதி நகரில் நடந்த சர்ப்ப யாகத்தையும் (நாகர் படுகொலை) சமாதான உடன்பாட்டையும் இன்றுவரை பிராமணர்கள் தினசரி சந்தியாவந்தனத்தில் கூறிவருகிறார்கள். உலகிலேயே நீண்ட வரலாறு படைத்த சமாதான உடன்பாடு இதுதான்!

20. பத்மபுராணம் மேல் ஏழு உலகங்களையும் கீழ் ஏழு உலகங்களையும் நன்றாக வருணிக்கிறது. அதள,பாதாள, ரசாதள என்பது தானவர்கள் நாகர்கள் வசிக்கும் இடம் என்றும் சொல்லுகிறது.மாயா பெயர்களில் வரும் ஏ டி எல் என்ற எழுத்துக்கள் அதள, தள என்ற பின் ஒட்டு சொல்லாக இருக்கலாம்.

21. தமிழர்களும் தெலுங்கர்களும் விளையாடும் பரமபத சோபான படத்தில் இன்றும் தடசகன், கார்க்கோடகன் போன்ற நாகர்கள் நினைவு கூறப்படுகின்றனர். நாகர்களை மட்டப்படுத்தும் வகையில் கிருஷ்ணபக்தர்கள் இந்த ஆட்டத்தை அமைத்துள்ளனர். யார் பாம்புக் கட்டத்துக்கு வந்தாலும் அவர்கள் கீழே போய் விடுவார்கள்.

22. நாகர்கள் தங்கள் உடம்பில் பச்சைக் குத்திக் கொண்டதாகத் தெரிகிறது. சங்க இலக்கியத்தில் இவர்கள் ஓவியர்கள், அருவாளர்கள் என்றும் வடமொழியில் இவர்களுடைய பெயர்கள் சித்திர என்ற சொல்லுடனும் உள்ளன. கிரேக்க வரலாற்று ஆசிரியர்களும் ஒபைட்ஸ் ( ஒவியர்) என்பவர்களை நாகங்களை வழிபடும் இனம் என்று வருணிப்பர்.

23. பஞ்சவிம்ச பிராமணத்தில் சர்ப்பராக்ஞி ( பாம்பு ராணி) யும் அதர்வ வேதத்தில் அலிகி, விளிகி யும் குறிப்பிடப்படுகின்றனர். அலிகி, விளிகி சுமேரியாவிலும் வேறு பெயர்களில் இருக்கிறார்கள்.

24. அமரிக்காவில் ஸ்வாமி த்ரிபுராரி எழுதிய நூலில், மாயாக்களும் இந்தியர்களும் வெண்கொற்றக் குடையை அரசர்களுக்குப் பயன்படுத்துவதும் ,ஒரே ஆட்டத்தை விளையாடுவதும், ஒவ்வொரு திசைக்கும் ஒரு வர்ணத்தை ஒதுக்கியதும், ஒரே வான சாத்திரக் கதைகளைக் கூறுவதும் தன்னிச்சையாக ஏற்படக் கூடிய ஒற்றுமைகள் இல்லை. உலகில் இப்படி எங்காவது கண்டது உண்டா? என்று கேட்கிறார். புத்த மதத்தினர், சைவர்கள், மாயாக்கள் ஆகிய மூவரும் நான்கு திசைகளுக்கு நான்கு வர்ணங்களை ஒதுக்கியிருக்கின்றனர்.

25. மாயாக்கள் தொடர்பான பெயர்களில் பல சம்ஸ்கிருத சொற்கள்: க்வாடிமாலா நாடு= கேதுமால த்வீபம் அல்லது கவ்தம ஆலய, மிட்லா=மிதிலை, அஸ்டெக் நாகரீகம்= ஆஸ்தீக ரிஷி, மாயா= தேவலோக சிற்பி மயன்,டிகல் நகரம்=த்ரி கால/ சிவன்,தெவாதிஹூவசன்= தேவ தக்ஷன், ஒரிநாகோ= ஓரி நாகன், மச்சுபிச்சு= மச்ச புச்சம்/ மீன் வால். இதே பெயரில் இமயமலையிலும் பெரு நாட்டிலும் இடங்கள் உள்ளன. யூகடன் தீபகற்பம்=யோகஸ்தானம், துலா, யகடக்ஸி=யக்ஷ தளி, யக்ச்சிலன்= யக்ஷ சீலன்.

26. நாகர்கள் எகிப்து வழியாகச் சென்றனரோ என்ற ஐயப்பாடும் உண்டு. எகிப்தில் 17 மன்னர்கள் ராம சேஷன் அல்லது ரமேசன் என்ற பெயரில் கி.மு 1500 முதல் ஆண்டார்கள். அவர்கள் அதலையில் சிவன் மாதிரி பாம்பு இருக்கும்.

27. மாயாக்களின் சிற்பங்களில் தாமரை, ஸ்வஸ்திகா, யானை முதலியன இருக்கும். இவைகளில் எதுவுமே அந்த இடத்தில் கிடையா.

28. மாயாக்களின் பிரதான தெய்வம் கொட்சகொட்ல (பறக்கும் பாம்பு). இது கருட சத்ரு என்பதன் திரிபாக இருக்கலாம்.

29. மாயாக்களின் ஒரு ராஜாவின் பெயர் தீயில் பிறந்தவன் (கி.பி 378). மகாபாரத கால திரவுபதி, ராஜஸ்தானிய சௌஹான் ஜாதியினர், சேர மன்னர்கள், வேளிர்கள் (கபிலர் புறநானூற்றில் தடவினில் தோன்றியவனே என்று வேளிரைப் பாடுகிறார்) ஆகியோர் தங்களை யாக குண்டத்தில் பிறந்தவர்கள் என்பர். அகத்தியர், வசிட்டர் போன்றோர் தங்களை குடத்தில் (கும்ப முனி) பிறந்தவர்கள் என்பர். இன்னொரு மாய மன்னரின் பெயர் கான் மாக்ஸ் (கி.பி700). இதன் பொருள் மகா நாகன். கான் என்றால் மாயா மொழியில் நாகம்/பாம்பு என்று பொருள். கான் என்பதைத் திருப்பிப் படித்தால் நாக என்று வரும். இதை மொழியியல் ஆய்வாளர்கள் மிர்ரர் இமேஜ் (கண்ணாடியில் பார்ப்பதைப் போல வட இடமாக) என்பர். மக்ஸ் என்பது சம்ஸ்கிருத மஹா என்பதன் திரிபு.

30. மாயாக்களின் முக்கிய நகரங்களில் ஒன்று பளிங்கு. அங்கே பளிங்கு போன்ற கற்கோவில்கள் இருக்கின்றன. பளிங்கு என்பது கண்ணாடி, படிகம் என்ற பொருளில் தமிழில் புழங்கும் சொல். தமிழ் நாகர்களும் தென் அமெரிக்க சென்றனர் என்பது கட்டமரம், பல்லவ கிரந்தம், மருதன் இள நாகன் போன்ற சொற்களிலிருந்து புலனாகிறது. மாயாக்களின் எழுத்து பல்லவ கிரந்தம் போலவே சுழிவுகளுடன் இருக்கும், தென் கிழக்கு ஆசிய நாடுகள் பேசும் எல்லா மொழிகளுக்கும் பல்லவ கிரந்தமே மூல எழுத்து என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே.

31. மாயாக்களுக்குப் பின்னர், அஸ்டெக், இன்கா இன மக்களும் தென் அமெரிக்க ,மத்திய அமெரிக்க பகுதிகளை ஆண்டனர். ஒலெமக் என்ற நாகரீகம் இதற்கு முன் இருந்தது. மெக்ஸிகோ நகரில் மிகப் பெரிய அஸ்டெக் காலண்டர் இருக்கிறது. அதில் இரண்டு பெரிய பாம்புகள் உள்ளன. இவைகளை இந்துக்கள் கால சர்ப்பம் என்று அழைப்பர். காளி என்ற பெயரில் பிரமிடும் கோவிலும் இருக்கின்றன.

32. மகன், மகள்களை தாத்தா, பாட்டி பெயர் கொண்டே (பெயரன்) அழைக்கின்றனர். பூ, பழம், பாம்பு,கருடன்- இவைகளைப் பெயராகச் சூட்டுகின்றனர். இந்தியாவிலும் இப்படி தாமரை, மல்லிகை மற்றும் பூ, பழம் பெயர்களையே அதிகம் சூட்டுகின்றனர். இந்துக்கள் அனுஷ்டிக்கும் நாமகரணம், புன்யாஹ வசனம், குருகுல வாசம் ஆகியன மாயாக்களிடமும் இருந்தன.

33. இந்தியாவில் படை வீரர்கள் நவ கண்டம் முதலியவற்றின் மூலம் உயிர்த் தியாகம் செய்தனர். கபிலர், குமாரில பட்டர் போன்றோர் தீயில் புகுந்து உயிர்வீட்டனர். மகாபரதத்திலும் அரவான் களபலி கொடுக்கப்பட்டான். இதை மாயாக்களும் செய்தனர்.

34. இந்திய மன்னர்கள் சிம்மாசனத்தைப் பயன்படுத்தினர். மாயாக்கள் சிங்கம் இல்லாததால் ஜாகுவார் புலி ஆசனத்தைப் பயன்படுத்தினர். சிங்கத்தைக் குறிக்கும் சிங் என்ற சொல்லும், கேசரி (சீசர்) என்ற சொல்லும் பல மொழிகளில் உள்ளன.

35.மாயாக்களும் உயரமான கோபுர வடிவக் கோவிலகளைக் கட்டினர். எகிப்தில் பிரமிடுகள் இப்படி இருந்தபோதிலும் அவைகள் சவ அடக்கம் செய்யப்பட்ட இடங்கள். மாயாக்களும் இந்திய ராஜாக்களைப் போலவே நகைகள் அணிந்தனர். எகிப்தியர் போல அல்ல. கிருஷ்ணர் மயிற்பீலி அணிந்தது போல மாயாக்களும் பறவை இறகை அணிந்தனர்.

36. வேத கால காலண்டரில் நாலைந்து வருடத்துக்கு ஒரு முறை மல மாதம் என்று விலக்கப்பட வேண்டிய தீட்டு மாதம் வரும். மாயாக்கள் ஒவ்வொரு மாதத்திலுமே 5 நாட்களை வேண்டாத நாட்களாக கருதினர்.

37. இந்துக்களைப் போலவே நிலவில் முயல் இருப்பதாகக் கருதினர். வேறு பண்பாடுகளில் இதைக்

கிழவி, மன் என்றெல்லாம் சொல்லுவார்கள். ராகு கேது பாம்புகள் நிலவை விழுங்குவதே கிரகணம் என்று இந்துக்கள் சொல்வதைப்போல அவர்களும் நம்பினர்.

38. டிகால் என்னும் ஊரிலுள்ள கோவில் மதுரை மீனாட்சி கோவில் போல இருப்பதாக ஒப்பிடுவர். ஊர்ர்ப் பெயர் கூட த்ரிகால என்று சிவனின் பெயர் போல இருக்கிறது.

39. மாயாக்காளும் சப்பாத்தி உணவைச் சாப்பிட்டனர். ஆனால் கோதுமைக்குப் பதிலாக தென் அமெரிக்காவில் அதிகம் விளையும் சோள மாவில் அதைச் செய்தனர். அதன் பெயர் டோர்டியா.

40. சூரிய வழிபாடு இந்த நாகரீகத்திலும் உண்டு. அது 1500ஆம் ஆண்டு வரை நீடித்தது. கடைசியாக சூரியனை வழிபட்ட இன்கா இன மக்களின் பெயர் இனன் (சூரியன்) என்ற சம்ஸ்கிருத சொல்லிலிருந்து வந்தது என்பர்.

41.மாயா நாகரீகத்தில் உள்ள சில அம்சங்கள் பற்றி சில கேள்விகளைக் கேட்டால் அதற்கான பதிலில் அது இந்து நாகரீகம் என்று வந்துவிடும். அ) மாயாக்களுக்கு இந்துக்களுக்குத் தெரிந்த பூஜ்யம் என்பதை யார் சொல்லிக் கொடுத்தனர்? ஆ) அவர்களுக்கு யார் எழுதக் கற்றுக் கொடுத்தனர்? இ) யார் வான சாத்திரம் கற்பித்தனர்? ஈ) யார் அசோக மன்னன் போல கல்வெட்டில் பொறிக்கச் சொல்லிக் கொடுத்தனர்? உ) யார் மன்னர்களுக்குக் குடை பிடிக்கும் வழ்க்கத்தைக் கற்பித்தனர்? ஊ) சிவனின் 5 முகங்களுக்கும் ஐந்து வர்ணம் கூறுவது போல நாலு திசைகளுக்கும் மாயாக்கள் வர்ணம் ஒதுக்கினரே.இதைக் கற்பித்தது யார்? எ) கலியுகத்தை ஒட்டி ஆண்டு துவக்கியது ஏன்? ஏ) இந்துக் கோவில் போல உயரமான கோவில் கட்டக் கற்பித்தது யார்? ஐ) மாயாக்கள் எங்கிருந்து வந்தனர்? ஒ) இந்தியர் விளையாடும் அதே ஆடு புலி ஆட்டத்தை அவர்களும் ஆடுவது எப்படி? இவை எல்லாம் ஒரு தொடர்பும் இல்லாமல் தன்னிச்சையாகக் கண்டுபிடிக்கக் கூடியது அல்ல.

42.மாயாக்களும் இந்தியர் போல பச்சைக் கற்களையும் முத்துக்களையும் நகை செய்யப் பயன்படுத்தினர்.

43. நம்மைப் போலவே சகுனங்களில் நம்பிக்கை வைத்தனர்.

44. இந்துப் புராணக் கதை போலவே சில கடவுள் கதைகள் உள்ளன.

45. இந்துக்கள் அரச மரத்தை வழிபடுவது போல மாயாக்களும் ஆப்ரிக்க மக்களும் கரீபியன் தீவு மக்களும் செய்பா எனப்படும் இலவம் பஞ்சு மரத்தை ( சால்மலி) வழிபட்டனர். இந்து புராணங்களில் சால்மலித்வீபம் என்று ஒரு கண்டம் அழைக்கப்படும்.

46. இந்துக்கள் போல கால்களை மடித்து உட்காருகின்றனர். மன்னர்கள் பல்லக்குகளில் போகின்றனர். ஆனால் உலகில் பல நாகரீகங்களில் காணப்படும் சக்கரங்களைப் பயன்படுத்தாதது ஏன் என்று இன்று வரை தெரியவில்லை.

47.மாயாக்கள் இடையே ஜாதி முறை இருந்தது. மன்னர்களின் ஆட்சி ஆண்டுகளை சோழ பாண்டியர் போலவே கல்வெட்டுகளில் பதித்தனர்.

48. கற்பக விருட்சம், சொர்கம், அம்ருதம் ஆகியவற்றை நம்பினர்.

49. பந்து விளையாட்டைத் தமிழ்ச் சிறுமியர் கைகளால் விளையாடினர். மாயாக்கள் கால்களால் பந்து விளையாடினர்.

50. மத்திய அமெரிக்காவிலுள்ள முக்கிய தெய்வங்களில் ஒன்று வீரகொச்சா. பல்லவ மான்னர்களின் மூதாதையர் பெயரில் வீரகுர்ச்சா என்ற பெயருள்ளது.

51. பாம்புகளின் ஆதிக்கம் எல்லா மட்டங்களிலும் காணப்படுதால் இவர்கள் நாகர்களாக இருக்கக்கூடும்.

52. 1994 ல் மெக்ஸிகோவில் "சோழன் நாகா" புரட்சி வெடித்தது. சோழன் நாகர் தங்களை பழைய நாகரீகப் பிரதிநிதிகள் என்று கூறிக்கொள்கிறனர்.

53. பகல் என்ற மன்னர் 683-ல் ஆண்டார். அவர் சூரிய திலக என்று அழைக்கப்படுவார். நாமும் ராமர் முதாலான அரசர்களை சூரிய குல திலக அல்லது சூர்ய வம்ச ரத்ன என்றெல்லாம் புகழ்கிறோம்.

54.அஸ்டெக்குகளும் மாயாக்களும் கழுகு வாயில் பாம்பு இருக்கும் சின்னத்தைப் பயன்படுத்தினர். சேர சோழ, பாண்டியர் போல இவர்களுக்குள்ளும் பிரிவுகள் இருந்ததைக் காணமுடிகிறது

55.இந்துக்கள் தட்சசீலம், நாளந்தா பல்கழைக் கழகங்களில் புத்தகங்களை சேகரித்து வந்தது போல மாயாக்களும் அழகான புத்தகங்கள் வைத்திருந்தனர். ஸ்பானியர்கள் அவைகள் எல்லாவற்றையும் குவித்து தீவைத்து எரித்து, ஒன்று கூட விடாமல் எரித்தோம் என்று தம்பட்டம் அடித்துக் கொண்டனர். 1562 ஆம் ஆண்டில் டீகோ டெ லாண்டா என்பவர் எழுதிய கடிதத்தில் எல்லா புத்தகங்களையும் எரித்ததைப் பெருமையுடன் குறிப்பிடுகிறார். 1546ஆம் ஆண்டில் கிறிஸ்தவ மதத்தை ஏற்காதவர்களைக் கொன்றுகுவித்ததையும் எழுதி வைத்துள்ளனர்.

56. இந்து மத காபாலிகர்கள் போல சில சடங்குகளில் கறுப்பு உடை தரித்தனர் மாயாக்கள்.

57. குளத்தில் காணிக்கைகளைப் போடும் வழக்கமும் யோகாசன நிலையில் அமரும் வழக்கமும் இவர்களிடையேயும் இருந்தது.

58. குப்தர் காலம் போல குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகளை வழங்கினர்.

59. தமிழ் செப்புச் சாசனங்களில் மன்னர்கள் நான்கு கடல்களின் நீரையோ அல்லது இரு பக்கமுள்ள கடல்களின் நீரையோ ஒரே பகலில் நீராடியதைப் பெருமையுடன் கூறுவர் ( நாற்கடல் நீரை ஒரு பகல் ஆடி). தங்களுடைய ஆதிக்கம் நாடுமுழுதும் இருந்தது என்பதை இது குறிக்கும். இதற்காக ரிலே ரேஸ்/ தொடர் ஓட்டம் ஓடும் ஆட்களை வேலைக்கு வைத்திருந்தனர். மாயாக்களும் இப்படி தொடர் ஓட்ட ஆட்கள் மூலம் பல செயல்களைச் செய்தனர். இதுவும் இந்திய வழக்கம்.

60. ரோமானியர்கள் போல இளம் சிவப்பு எனப்படும் பிங்க் கலர் மாயா உலகிலும் சிறப்பு வாய்ந்தது. இதை ஒரு வகை கடல் சிப்பியிலிருந்து எடுத்து ஏற்றுமதி செய்தது இந்தியர்களே.

61. "சாக்" எனப்படும் மழைத் தெய்வத்தை மாயர்கள் வழிபட்டனர். இது இந்திரன் என்றும் அவனுக்கு சக்ரன் என்று வடமொழியில் உள்ள பெயர் சாக் ஆனது என்றும் ஆராய்ச்சியாளர் சுட்டிக்காட்டுவர்.

62. தமிழ் நாட்டில் காணப்படும் அம்மியும் குழவியும் மாயா வீடுகளிலும் இருந்தன.

63. திரிலோக நாத் என்ற தெய்வத்தை அவர்கள் வழிபட்டதையும் அந்தப் பெயர் ஸ்பானியர்களால் உருத்தெரியாமல் மாற்றப்பட்டு எழுதப்பட்டதையும் மாயாக்களுடைய மந்திரங்கள் வேத மந்திரங்கள் போல இருப்பதையும் தாமரை, ஸ்வஸ்திகா சின்னம், யானை முதலியவற்றை அவர்கள் பயன்படுத்தியதையும் 75 ஆண்டுகளுக்கு முன்னரே "இந்து அமெரிக்கா" என்ற புத்தகத்தில் பிட்சு சமன்லால் எழுதிவிட்டார்.

64. மாயா கட்டிட வரைபடங்கள், கோவில் அமைப்புகள் பற்றி இப்பொழுது அமெரிக்கர்கள் புதிய புத்தகங்களை வெளியிட்டு இருக்கின்றனர். அவைகளை நமது வாஸ்து சாத்திரக் கோட்பாடுகளுடன் ஒப்பிட்டால் மேலும் பல புதிய உண்மைகள் வெளிப்படும்

65. மாயாக்கள் காதில் போட்டிருக்கும் வளையங்கள் குண்டலங்கள் நம் நகைகளைப் போலவே இருக்கும். மாயா மன்னர்களும் இந்திய மன்னர்களைப் போலவே அந்தப் புறத்தில் காமக்கிழத்திகளை வத்திருந்தனர். அவர்களை பள்ளா என்று அழைத்தனர். இந்தியில் பள்ளு என்பது புடவையின் மேல் தலைப்பு.

66. போனம்பாக் என்னும் இடத்தில் கிடைத்த படங்களில் நம் ஊர்க் கோவில்களில் சுவாமி ஊர்வலத்தில் இசைக் கலைஞர்கள் ஊர்வலம் போவது போல படங்கள் உள்ளன. குறவஞ்சி, கதகளி நடனம் போன்ற நாட்டியப் படங்களும் இருக்கின்றன.

67. இந்துக்கள் இறந்தோர் வாயில் வாக்கரிசி போடுவதைப் போல மாயர்கள் மக்காச் சோளத்தையும் ஜேட் எனப்படும் பச்சைக் கற்களையும் போட்டனர். இறந்த பின் மனிதன் உள்ள நிலை குறித்து இருவரும் ஒரே நம்பிக்கை வைத்திருந்ததை இது காட்டும்.

68. மற்றொரு புதிரிலும் அவர்கள் இந்தியரைப் போலவே இருக்கின்றனர். கல்ஹணர் எழுதிய ராஜ தரங்கிணி என்ற நூலில் கலியுகத்துக்கும் அவர் கூறும் கணக்கிற்கும் 600 ஆண்டுகள் வித்தியாசம் இருக்கிறது. இதே போல மாயாக்கள் கி.மு.3114 என்று காலண்டரைத் துவக்கினாலும் அவருடைய வரலாற்றுத் தடயங்கள் 2600 முதலே கிடைக்கின்றன. ஆக, இந்தியாவைப் போலவே அங்கும் இரு வகை ஆண்டுக் கணக்கு இருந்ததோ என்று எண்ணவேண்டி இருக்கிறது. இந்தப் புதிரை எதிர்கால ஆய்வுகள் தீர்க்கக்கூடும் !!

69. நாகர்கள் வட கிழக்கு இந்திய மாநிலமான நாகாலாந்து முதல் இலங்கையின் தென்கோடி வரை இருக்கிறார்கள். குப்தர்களின் கல்வெட்டுக்களிலும், இலங்கைத் தமிழ் கல்வெட்டுகளிலும் தமிழ் வடமொழி இலக்கியங்களிலும் ,மஹாவம்சத்திலும் குறிப்பிடப்படுவதால் இவர்கள் அமெரிக்கா வரை சென்று குடியேறினார்கள் என்று நம்புவதில் தவறில்லை.








**திரிபுரம் முதல் தமிழகம் வரை பேசப்பட்ட மயன்.**

**ரோமக தேச மயன்.**

திரிபுர மயனுக்கு அடுத்து மயனது பெயர், ரோமக தேசத்தில் வருகிறது. மயன் என்னும் மிலேச்சன் ரோமக நாட்டைச் சேர்ந்தவன் என்றும், அவனுக்கு சூரியன் அருளிய வான சாஸ்திரமே சூரிய சித்தாந்தம் என்றும் அந்த நூலில் சொல்லப்பட்டுள்ளது. சமஸ்க்ருத்த்தில் இருக்கும் அந்த நூல், வராஹமிஹிரர் உள்ளிட்ட பலரும் பயன்படுத்திய நூலாகும். அந்த நூலில் ரோமக தேசத்தின் இருப்பிடம் சொல்லப்பட்டுள்ளது. இந்த இடம் இலங்கைக்கு மேற்கே 90 பாகைகள் தொலைவில் இருக்கிறது. அதாவது, லங்கையில் நண்பகல் வரும் பொழுது, ரோமக தேசத்தில் பொழுது விடிந்து கொண்டிருக்கும். இந்த இடம் இன்று அட்லாண்டிக் கடலுக்குள் இருக்கிறது. 46 ஆவது கட்டுரையில் நாம் காட்டிய அட்லாண்டிஸ் நகரமும் இதே இடத்தில் அமைந்திருந்தது என்பதை நினைவுபடுத்திக் கொள்ளவும்.

(பார்க்க பகுதி 46) அட்லாண்டிஸ் நகரம், கட்டிடக் கலைக்கும், நன்கு அமைந்த நகர அமைப்புக்கும் பெயர் போனது. அந்த இடத்தில் ரோமக தேசமும் அமைந்திருக்கவே, ரோமக தேசம் என்பதே அட்லாண்டிஸ் என்பதன் பண்டைய பெயராக இருக்கக்கூடும். அங்கு மயன் இருந்தான் என்று சூரிய

சித்தாந்தம் சொல்வதால், அந்த நகரத்தில் உயரிய கட்டடங்கள் இருந்தன என்று சொல்லப்படுவதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. அங்கிருந்த மயாசுரனுக்கு இன்றைக்கு 10,000 ஆண்டுகளுக்கு முன் சூரியன், "சூரிய சித்தாந்தத்தை' உபதேசித்தான் என்று அந்த நூலை ஆராய்ந்தவர்கள் கூறுகிறார்கள்

**மஹாபாரதத்தில் மயன்.**

இந்தக் காலக் கட்டத்திற்குப் பிறகு மயனின் பெயர் மஹாபாரதக் காலத்தில்தான் வருகிறது. இந்தக் காலக் கட்டத்திலிருந்துதான் மயனது வாஸ்து நிபுணத்துவத்தைச் சான்றுகளோடு சொல்ல முடிகிறது. மஹாபாரதத்தில், காண்டவ வனத்தை அர்ஜுனன் அழிக்கும் போது மயன் பெயர் வருகிறது. அந்த வனத்தில் இருந்த மயன், நெருப்பில் சிக்கிக் கொள்கிறான். (திரிபுர சம்ஹாரத்தில் நிகழ்ந்ததைப் போல) நெருப்பிலிருந்து அவனை அர்ஜுனன் காப்பாற்றுகிறான் அதற்குத் தன் நன்றியைக் காட்டும் விதமாக ஏதாவது கைம்மாறு செய்வதாக மயன் சொல்கிறான். அதற்கு அர்ஜுனன் மறுப்பு தெரிவிக்கிறான். அதைப் பார்த்துக் கொண்டிருந்த கிருஷ்ணன், கைம்மாறை ஏற்றுக் கொள்ளும்படி சொல்லி, மயனை நோக்கி, ஒரு மிகச் சிறந்த அரண்மனையைப் பாண்டவர்களுக்குக் கட்டித்தருமாறு கேட்டுக் கொள்கிறான். மயனும் அவ்வாறே செய்வதாகச் சொல்கிறான் (ம-பா 2-1)

அவன் பாண்டவர்களுக்காக நிர்மாணித்த சபா மண்டபம், மயசபை எனப் புகழ் பெற்றது. அதைக் கட்டுவதற்கு வேண்டிய அபூர்வப் பொருட்கள், சங்குகள், பலவித பளிங்குக் கற்கள் ஆகியவற்றை, கைலாய மலைக்கு வடக்கிலிருந்து கொண்டு வருகிறான். அவற்றைக் கொண்டு 14 மாதங்களில் மய சபையை அமைத்துக் கொடுக்கிறான். அந்த மயன் கட்டிய அரண்மனையின் முக்கிய அம்சம், அரண்மனைக்குள்ளேயே இருக்கிற குளம் ஆகும். அது வருண சபையை ஒத்தது என்று அனைவரும் புகழ்கிறார்கள். வருண சபை என்பது இயற்கைச் சிற்பியான விஸ்வகர்மாவினால் உலகில் நில பாகங்களிக்கிடையே உண்டான கடல் என்பதை மஹாபாரத வர்ணனை மூலம் அறிகிறோம். இயற்கையில் இருந்த அமைப்பை, அதற்கு ஒப்புமையாகக் கூறியுள்ளதால், மய சபையின் குளம், செயற்கையானதும், முதன் முதலில் ஒரு மாளிகைக்குள் கட்டப்பட்டதும் ஆகும் என்று நினைக்க வாய்ப்பிருக்கிறது. மஹாபாரத விவரத்தைக் கொண்டு மய வாஸ்து என்பது கிருஷ்ணனுடைய அனுமதியின் பேரில் முதன் முதலில் பாரதத்தில் நுழைந்திருக்கிறது என்று தெரிகிறது. மயவாஸ்து என்பதே, குறிப்பாக யானம், சயனம், மாயத்தோற்ற அமைப்புகள், விசித்திர அமைப்புகள் இவற்றுக்குப் பெயர் போனவை. சிலப்பதிகாரத்தில் கோவலன் - கண்ணகியின் கட்டில், மயன் நிருமித்த விதிகளால் செய்யப்பட்ட கட்டிலைப் போல இருந்த்து என்ற குறிப்பு வருகிறது. "மயன் விதித்தன்ன மணிக்கால் அமளி" (சி- 2- 12) என்பதில் 'அன்ன' என்று சொல்லியுள்ளாதால், மயனது விதிகளால் செய்யப்பட்ட கட்டிலைப் போல இருந்தது என்றாகிறது. இதன் மூலம் மயனது தொழில் நுட்பம் பாரதம் முழுவதும் பரவியிருந்தது என்று தெரிகிறது. இதை மெய்ப்பிக்கும் வண்ணம் சிலப்பதிகாரத்தில் இன்னொரு விவரம் வருகிறது. அதில் இந்திர விழா நடந்த போது வைக்கப்பட்டிருந்த சில அபூர்வப் பொருட்களைப் பற்றிய விவரம் வருகிறது. அவை கரிகால் பெருவளத்தான் வடதிசை நோக்கிப் பயணம் செய்த போது, அவனுக்குத் திறையாகச் செலுத்தப்பட்டவை. சோணையாற்றங்கரையில் இருந்த வஜ்ஜிர நாட்டு மன்ன்ன் கரிகாலனுக்கு, முத்துப் பந்தல் தந்தான். மகத நாட்டு மன்ன்ன் பட்டி மன்றம் தந்தான். அவந்தி நாட்டு மன்னன் தோரண வாயில் கொடுத்தான்.

இவை எல்லாம் பொன்னாலும், மணியாலும் செய்யப்பட்டவை. இவற்றைச் செய்த கம்மாளார், நுண்வினைஞர்கள் ஆகியோரது முன்னோர்கள் தொன்மையான ஒரு காலத்தில், மயனுக்குச் செய்த உதவிக்குக் கைம்மாறாக, மயனிடமிருந்து இந்த நுட்பங்களைத் தெரிந்து கொண்டார்கள். அவர்கள் வழியில் வந்தவர்களால் செய்யப்பட்ட இந்தப் பொருட்கள் மயன் நிருமித்த வகையால் செய்யப்பட்டு, பார்ப்போரை பிரமிக்கச் செய்வனவாக இருந்தன. அந்தப் பொருட்களை, இந்திர விழாவின் போது பார்வைக்கு வைத்திருந்தனர். (சிலம்பு -5) அவற்றை அமைத்த கம்மாளர்களுடைய முன்னோர்

மயனுக்குச் செய்த உதவி என்ன, அதற்கு ஏன் மயன் கைம்மாறு செய்தான் என்று தேடும் போது, மய சபை நிர்மாணம் பொருந்துகிறது. மயசபையைத் தனி ஒருவனாக மயன் கட்டியிருக்க முடியாது. ஏற்கெனெவே அங்கிருந்த கம்மாளர்கள், தச்சர்கள், நுண் வினைஞர்கள், கட்ட்டக் கலைஞர்கள் ஆகியோரை வேலைக்கமர்த்தியிருக்கிறான். அந்த வேலையில், அவர்களும், மயனிடமிருந்து பல நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டிருக்கின்றனர். அந்த நுணுக்கங்கள் பரம்பரை பரம்பரையாக சீடர்களுக்கோ அல்லது அவரவர் வம்சாவளிகளுக்கோ கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தத் திறமையால் அவர்கள் வடபால் அரசர்களுக்குச் செய்து கொடுத்த பந்தலும், பட்டி மன்றமும், தோரண வாயிலும் கரிகாலன் வசம் வந்து பூம்புகாரில் காட்சிப் பொருள்களாக ஆயின. இவற்றையெல்லாம் இங்கு சொல்வதற்குக் காரணம், இந்தப் பாடலில் "தொல்லோர் உதவிக்கு மயன் விதித்துக் கொடுத்த மரபின்" என்று சொல்லப்பட்டுள்ள தொல்லோர், மஹாபாரதத்தில் பாண்டவர்களுக்கு மயன் மாளிகை கட்டிக் கொடுத்த போது அவனிடம் வேலை செய்தவர்களாக இருக்க வேண்டும் என்று காட்டுகிறது. மயன் இட்ட பணிகளைச் செய்ததால், பதிலுக்கு மயன் அவர்களுக்குத் தன் தொழில் ரகசியங்களைக் கற்றுத் தந்திருக்கிறான். அது, இளங்கோவடிகள் வாயிலாக வெளிப்பட்டிருக்கிறது. இதன் மூலம், மஹாபாரதமும், சிலப்பதிகாரமும் நடந்த விவரங்களையே தந்திருக்கின்றன என்று தெரிகிறது. மஹாபாரதத்தில் வரும் எல்லா விவரங்களுமே சரித்திரச் சான்றுகள் என்று ஏற்றுக் கொள்ளத்தக்கவையே என்று நிரூபிக்கின்றன. அந்த மஹாபாரதம் நடந்து 5000 ஆண்டுகள் ஆகியுள்ளன.

அப்பொழுதே பரம்பரை விஸ்வகர்மாக்களும் இருந்திருக்கிறார்கள். அவர்கள் மய வாஸ்துவையும் கற்றிருக்கிறார்கள். விஸ்வகர்ம வாஸ்துவுக்கும், மய வாஸ்துவுக்கும், அளவு முறைகளில் அதிக வித்தியாசம் இல்லை. கிராமம், தெருக்கள் போன்றவற்றை அளக்கும் யோஜனை என்னும் தூரத்தில்தான், இரண்டிலும் அதிக வேறுபாடு இருக்கிறது. மற்றபடி அவர்கள் அதிகம் மாறுபடுவதில்லை. ஆனால் மய வாஸ்து என்பது, கட்டடக்கலை (Architecture), யானம், சயனம் ஆகியவற்றில் முக்கியத்துவம் கொண்டது. சமையல் அறையைத் தென் கிழக்கில் அமைப்பது, மயமதம் சொல்லும் விதியாகும். ஆனால் ஒரு வீட்டின் வாயில் கதவு இருக்கும் திக்கின் அடிப்படையில் சமையல் அறை உள்ளிட்ட அறைகளை அமைக்க வேண்டும் என்பது விஸ்வகர்ம பிராகாசிகையின் கருத்து. ஒரு வீடு என்றால், முன்கட்டு, இடைப் பகுதி, பின் கட்டு என்று அமைத்து, பின்கட்டில் சமையல் அறை அமைக்க வேண்டும் என்பது விஸ்வகர்மா நிர்ணயித்த விதி. அந்த அமைப்பில்தான், நமக்கு முந்தின தலைமுறை வரை, வீடுகள் அமைத்தார்கள் என்பதால், தமிழ் நாட்டுப் பகுதிகளில், விஸ்வகர்ம வாஸ்துவே இருந்திருக்கிறது என்று தெரிகிறது. சிற்பங்கள், விசித்திர அமைப்புகள், யானம், சயனம் ஆகியவற்றில் மயவாஸ்துவைக் கற்றுக் கொண்டு பின்பற்றியுள்ளார்கள் என்பதை "மயன் விதித்தன்ன மணிக்கால் அமளி" என்னும் சிலப்பதிகார வரிகள் மூலம் தெரிந்து கொள்கிறோம்.

### சங்ககாலத்தில் மயன்.

மஹாபாரதக் காலத்துக்கு அடுத்தாற்போல மயனது பெயர் வருவது இரண்டாம் தமிழ்ச் சங்ககாலமாக இருக்கலாம் என்று, டா. கணபதி ஸ்தபதி அவர்கள் கண்டெடுத்துள்ள "ஐந்திறம்' என்னும் நூல் மூலம் தெரிகிறது. தமிழ்ச் சங்கத்தில் தங்கள் நூல்களை அரங்கேறுவதில், பாரதம் முழுவதுமே மக்கள் ஆர்வமாக இருந்தனர் என்று பார்த்தோம். ராமாயணம் எழுதிய வால்மீகி முனிவர் முதல், கிருஷ்ணனது குல குருவான சாண்டில்யர் வரை ஆரிய அரசன் எனப்பட்ட பிரமதத்தன் உட்பட பலரும் தமிழ்ச் சங்கத்தில் தங்கள் படைப்புகளை அரங்கேற்றியுள்ளனர். அப்படிப்பட்ட பெருமை மிக்க சபையில், மயனும் அரங்கேற்றியுள்ளான் என்பது சாத்தியமே. அதை உறுதி படுத்துவது போல ஐந்திறத்தில் "குமரி மாநிலம் நெடுங்கலை ஆக்கம் அமர்நிலைப் பேரியல் வெற்புறம் திறனாய் பல்துளி யாற்றுப் பெருமலை திறனிலைப் புக்குறும் நிலைத்திறன் ஏழேழ் நிலமும் ஏழேழ் நாடென இயம்புறும் காலை" (ஐந்திறம் - 812) என்று சொல்லப்பட்டுள்ளதால், இந்நூல் கபாடபுரத்தில் நடந்த இரண்டாம் சங்க காலத்தில் அரங்கேற்றிய நூலாக இருக்க வேண்டும். இந்த நூல் ஐந்திறம் எனப்பட்டது. இது ஐந்திரம் அல்ல.

தொல்காப்பியர் தாம் ஐந்திரம் அறிந்துள்ளதாகச் சொன்னது, ஐந்திரன் என்னும் இந்திரன் இயற்றிய ஐந்திரம் என்னும் வியாகரண நூலாகும். இது இலக்கண நூல்.

இந்த ஐந்திர வியாகரண சாஸ்திரம், பொ-பி- 1800 ஆண்டுகள் வரை, அதாவது ஆங்கிலேயர்கள் நம் பாட முறையை நீக்கித், தங்கள் பாட முறையைப் புகுத்தின வரையிலும், மெட்ராஸ் ப்ரெசிடன்சி எனப்பட்ட, தமிழ் நிலங்களில் பாட சாலைகளில் கற்றுத்தரப்பட்டது. முன்பே 'தமிழ்ப் பார்ப்பனர்' கட்டுரையில், தமிழ், சமஸ்க்ருதம் ஆகிய இரண்டு மொழிகளிலும் 'தலை' என்னும் தலையாய பாடமாக, இலக்கணம் சொல்லித்தரப்பட்டது என்று பார்த்தோம். இந்திரன் மஹேந்திர மலையின் மீதமர்ந்து உபதேசித்த ஐந்திரம் என்னும் இலக்கண நூல் சமஸ்க்ருதப் பாடத்தில் சொல்லித்தரப்பட்டது. மயன் அரங்கேற்றிய ஐந்திறம் என்பது சிற்ப சாஸ்திரத்தைக் கற்பவர்கள் கடைபிடிக்க வேண்டிய முறைகளைச் சொல்கிறது. ஓம் என்னும் பிரணவ மந்திரத்தில் மனதை நிலை நிறுத்தி, அதன் மூலம் ஒருவன் அடையும் உள்ளொளி முன்னேற்றத்தைத் தத்துவ ரீதியில் அதில் சொல்லப்பட்டுள்ளது. ஒரு சிற்பிக்கு அப்படிப்பட்ட மன நிலை தேவை. அப்பொழுதுதான் அவனால், தெய்வ சக்தியை நிலைபெறச் செய்யக்கூடிய தெய்வ உருவை அமைக்க முடியும். ஓம் என்னும் மூலத்திலிருந்து பயணிக்கும் போது, அந்த ஓங்காரம் ஊடுருவும் காலம், அதன் சீலம் (லயம்) அது காட்டும் கோலம் (உருவம்) அந்த உருவம் நிலைபெரும் ஞாலம் என்பவற்றை அடைய முடியும். இந்த ஐந்திறங்களும் அமையப் பெற்ற சிற்பி, இயல், இசை, நாடகம், சிற்பம், கட்டடம் என்னும் ஐந்து திறன்களிலும் தேர்ச்சி பெறவேண்டும். ஒரு இலக்கியவாதிக்கு இயல் (இலக்கணம்) மட்டும் தெரிந்தால் போதும். ஒரு இசைக் கலைஞனுக்கு இயலும், இசையும் தெரிய வேண்டும். சிலப்பதிகாரத்தில், மாதவி அரங்கேற்றத்தின் போது, அவளது இசை ஆசிரியர்கள், எவ்வாறு இயலில் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

அந்த்த் தேர்ச்சி இருந்தால்தான், பாடும் பாடலைக் குற்றமில்லாமல் பாட முடியும். ஒரு நாடக, அல்லது நடனக் கலைஞனுக்கு, இயலும், இசையும் தெரிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் குற்றமில்லாமல், அவனது நாடக / நடனக் கலையை வெளிக் கொணர முடியும். ஒரு சிற்பக் கலைஞனுக்கு, இயல், இசை, நடனம் / நாடகம் என்னும் மூன்றுமே தெரிந்திருக்க வேண்டும். நடராஜர் சிலை வடிக்க வேண்டுமென்றால் இவை இல்லாமல் முடியுமா? ஒரு கட்டடக் கலைஞனுக்கு, முன் கூறிய இயல், இசை, நாடகம், சிற்பக்கலை என்னும் நான்குமே தெரிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான், ஒரு கட்டடத்தின் பல் வேறு விதமான தேவைகளை அவனால் சரிவரச் செய்ய முடியும். இந்தக் கருத்தை வெளிப்படுத்தும் ஐந்திறம் தந்த மயன், தான் கட்டிய அமைப்பில் அவற்றைக் காட்டாமல் இருப்பானா? பாண்டவர்களுக்கு அமைத்துக் கொடுத்த அரண்மனையில் எல்லா சித்து வேலைகளையும் அவன் காட்டினான். அதன் சிறப்பு அம்சம், மாளிகைக்குள் அமைந்த குளமாகும். நீர் இருப்பதே தெரியாத அமைப்பில் அவன் கட்டினதால், அதில் துரியோதனன் விழுந்து, அதைக் கண்டு திரௌபதி பரிகசிக்க, மஹாபாரதப் போருக்கான வித்து அங்கு இடப்பட்டது. இங்கு நமக்குத் தேவையான விவரம், மாளிகைக்குள் குளம் அமைத்தான் என்றால் அதற்கு எங்கிருந்து தண்ணீர் கொண்டு வரமுடியும்? அந்தக் குளத்தில் பயன்படுத்திய தண்ணீரை எப்படி வெளியேற்ற முடியும்? அங்குதான் மயனது திறமை பளிச்சிட்டது. அந்த்த் திறமையை அவனிடமிருந்து கற்றுக் கொண்ட 'தொல்லோர்' (சிலப்பதிகாரம் சொன்ன வரிகளை நினைவு படுத்திக் கொள்ளவும்),

தாங்கள் சென்ற இடங்களிலெல்லாம் வெளிக்காட்டாமல் இருந்திருப்பார்களா? அந்த அபூர்வத் திறமை, மொஹஞ்சதாரோ முதல், மஹாபாரதத்துடன் தொடர்பு கொண்ட எல்லா இடங்களிலும் தெரிகிறதே!. அவை மஹாபாரத மயன் பள்ளியில் பயின்றவர்களால் செய்யப்பட்டது போல் இருக்கிறதே! அப்படி உண்டான ஒன்றல்ல - பல வாபிகள் என்னும் குளங்கள் சிந்து சமவெளிப் பகுதிகளில் காணப்படுகின்றன. அவற்றை அமைப்பதற்கான பொறியியல் திறன் அதற்கும் முன்பே இருந்திருந்தால்தானே, சிந்து சமவெளிப் பகுதியில் அவற்றை நிர்மாணித்திருக்க முடியும்? அந்தத்

திறமை, பாண்டவர் அரண்மனையைக் கட்டிய மயனிடம் இருந்திருக்கிறது. அவனிடம் பயின்றவர்கள்தானே அவற்றை மொஹஞ்சதாரோவுக்கும், ஹரப்பாவுக்கும் எடுத்துச் சென்றிருக்க முடியும்? அவற்றை இனி ஆராய்வோம். (வட அமெரிக்காவுக்கும், தென் அமெரிக்காவுக்கும் இடையிருந்த மாயன் (அ) மயன் நாகரிகத்தைப் பற்றி இங்கு சொல்லவில்லை. அதற்கும் நாம் சொல்லும் மயனுக்கும் தொடர்பு இருப்பதாக எந்த பாரத நூலும் சொல்லவில்லை. ஆனால், அந்த நாகரிகத்தவர் சொல்லும் சுக்கிரன் சுழற்சி என்பதில் உள்ள சுக்கிரனுக்கும், தானவ அசுரர்களுக்கும் தொடர்பு உண்டு.

நாகப்பட்டினம்
நாகலாந்து
நாகர்கோவில்
நாகபுரி




இந்நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், முதலாவது நாகநாட்டில் "சாந்தியாபுரி" என்னும் நகரத்தில் நெடுங் காலம் வாழ்ந்து வந்தார்களென்றும், அவ்வூர் அரசன் கொடுமையால் கலியுகம் 204-வது ஆண்டில் காஞ்சீபுரத் துக்கு வந்து குடியேறினர்கள் என்றும், அவ்வூரில் "2108" ஆண்டுகள் வாழ்ந்திருந்தவர்களை அவ்வூரரசன் கொடுமை செய்ததால், கலியுகம் 2312-ம் ஆண்டு சோழ தேசத்திற்கு வந்து காவிரிப்பூம்பட்டினத்தில் குடியேறி னர்கள் என்றும், கலியுகம் 3775-ம் வருடம்வரை (அதா வது 1463 ஆண்டுகள்) வந்தே வாழ்ந்துகொண்டிருந்தவர்

(ஆதாரம் நாட்டுக் கோட்டை நகரத்தார் வரலாறு))

தொல்லை நாளில் நகார் என்ற வகுப்பினர் பல இடங்களில் மேன்மை யுற்றிருந்தனர் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. ஒரு காலத்தில் பவுநேயர் எனப்படும், ஆறுகோடி கந்தருவர் பாதாலத்திலிருந்த நாகருடைய தலைசிறந்த மணிகளையும், அன்னவராட்சியையும் வெளவிக் கொண்டனரென்றும், நாகர் திருமாலிடத்திற் சென்று முறையிட, அப்பெருமான் அவர்களை நோக்கி, 'மாந்தாதா என்னும் சக்கரவர்திதியன் மைந்தனான புருகுச்சன் என்பானிடத்தில்டயாம் ஆவேசித்து நுங்கள் பகைவரை அடக்குதும்' என அருளிச்செய்தன ரென்றும், நாகர் அது கேட்டு வணங்கி விடை பெற்றுப் பாதலம்புக்கு, தங்கள் உடன் பிறந்த நருமதையென்பாளைப் புருகுச்ச மன்னனுக்கு மனைவியாம்படி அனுப்பினரென்றும், அவளும் அவ்வேந்துடன் சேர்ந்து அவனைப் பாதலத்திற்குக் கொண்டு வந்து விட அம்மன்னவன் மாயோனின் பேரொளியால் ஆவேசிக்கப் பட்டு, அக்கந்தருவர் யாவரையும் அழித்து விட்டுத் தன் பட்டணம் அடைந்தனன் என்றும், புருகுச்சனுக்கு நருமதை வயிற்றில் திரசதஸ்யு என்பான் தோன்றினன் என்றும், அத் திரசதஸ்யுவின் வழியிலே சத்தியவிரதன், திரிசங்கு, அரிச்சந்திரன் முதலிய அரசர்கள் தோன்றினரென்றும் விட்டுணுபுரானம் (விஷ்ணுபுரானம்), நாலம் அமிசம், மூன்றாம் அத்தியாயத்திற் சொல்லியிருக்கிறது

நாகர்களைப்பற்றிக் கனகசபைப்பிள்ளையவர்கள் கூறுமாறு:- "தொகையிற் பெருக்க மடைந்து நாகரிகம் வாய்ந்த ஒரு சாதியார் இந்தியா, கடாரம் (பர்மா) இலங்கையென்னும் தேயங்களில் பெரும் பகுதிகளை ஓரொரு காலத்தில் ஆண்டிருக்கின்றனர். **இராமாயணத்து** நாடவிட்ட படலம் இவர்கள் பெயரைக் குறிப்பதன்றித் தென்னாட்டின் நடுவணிருந்த இவர்களது அரச நகரைப் பின்வருமாறு விரித்துக் கூறுகின்றது. 'போகவதிக்கருகே நாகர் வாழும் பதி யொன்றுள்ளது; அது பெரிய தெருக்களையும் மதிற்காப்பினையும் உடையது; தம் நச்சுப் பற்களால் மிகவும் கொடுமை வாயந்துள்ள நாகர் மைந்தரின் சேனைக்கூடம் அதனை காவல் புறிந்திருக்கும் ; மணி மண்டபத்தில் அரியனை வீற்றிருந்து அவர்களை ஆளும் அரசன் வாசுகி என்பான். அந்நகரையும் நகர்ப்புறத்தையும் நன்கு தேடுமின்"

"கி.மு. பதின்மூன்றாம் நூற்றாண்டளவில் கங்கை, யமுனை ஆறுகளுக்கு இடையில் நாகராண்ட நாடுகள் இருந்ததாக **மகாபாரதம்** விளக்குகிறது. திங்கள் மரபிற்தோன்றிய ஆரிய வரசர்கள் இப்பொழுது தில்லி(டெல்லி) இருக்கிமிடத்திற்கு அருகில் ஒரு நகரமைக்க ஆங்கிருந்த நாகரை வென்று அப்புறப் படுத்தியதாக அந்நூல் கூறுகிறது. கதாநாயகனான அருச்சுனன் தீர்த்தயாத்திரை சென்ற பொழுது உலூபி என்ற நாக கன்னியொருத்தியையும், மணிபுரத்தையாண்ட நாக வரசனாகிய சித்திர வாகனன் மகள் சித்திராங்கதையையும் மணந்து கொண்டான். இவன் பெயரன் தட்சகன் என்ற நாகவரசனால் கொல்லப்பட்டன், கொலையுண்ட பரீட்சித்தின் மகன் சனமேசயன் நாகருடன் பெரும்போர் விளைத்து அவர்களை ஆயிரக் கணக்காக மடிவித்தான். மற்றும் கி.மு. ஆறாவது நூற்றாண்டில் மகத நாடு நாகரது ஆட்சியிலிருந்ததாகச் சரித்திர ஆராய்ச்சியால் விளங்குகிறது. இவ் வமிசத்து ஆறாம் அரசனாகிய அசாத சத்துருவின் காலத்தில் தான் கௌதம புத்தர் தம் புதுக்கோட்பாடுகளைப் போதித்து, நாகர் பெரும்பாலும் அவற்றையே தழுவும்படி செய்தது".

இலங்கைத் தீவின் சரித்திரமெல்லாம் தொடக்கத்தில் நாகரைப்பற்றியே கூறும். கி.மு. ஆறாவது நூற்றாண்டில் இத்தீவின் குடபாலெல்லாம் நாகர் ஆளுகையில் இருந்ததெனவும், அதுபற்றியே இதற்கு நாகத்தீவம் என ஓர் பெயர் வழங்கிற்று எனவும் முன்னூல் மேற்கோள்களால்அறியப்படுகிறது. கல்யாணி நகரந்தான் நாகரது தலைநகர். கல்யாணி யரசன் தங்கை மகள் **கனவடமாறோலை** யரசனாகிய ஒரு நாகனுக்கு மணஞ்செய்விக்கப்பட்டாள். இம்லை, கல்யாணிக் கெதிரில் இந்தியக்கரையில் இக்காலத்து இராமேச்சுரத்திற்கு அருகேயுள்ள கந்தமாதனக்குன்றமாக இருக்கும் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டு . இப்பொழுது அமராவதி முதலிய இடங்களில் காணப்படும் சிலைகள் பின்புறத்திற் படம் விரிந்த பாம்பின் தலையுடையனவாய் நாகரைக் குறிப்பனவாக உள்ளன. அமராவதிப் பாழ்களிலிருந்து எடுக்கப்பட்ட இச் சிலைகளன் சில பினனங்களைச் சென்னையிற் பொருட்காட்சி மன்றத்தில் காணலாம். இச்சிலைகளில் அரசர்க்கு மூன்று படமும், அவர் மகளிர்க்கு மூன்று படமும், மற்றை நாகர்க்கு ஒற்றைப்படமும் காணப்படும். தொழில் திறம் பொருந்த இச்சிலைகளையியற்றிய சிற்பிகள், இந்நாகரை அரவின் தன்மை வாய்ந்து மக்களுருவமும் பாம்புஉருவமும் கலந்த மெய்யினரென்றே நினைத்தனர் போலும். பண்டைக்காலத்துத் தமிழ்ப்புலவர்களும் இவ்வாறே எண்ணம் கொண்டிருந்தனர். தம் காலத்து நாகரை மக்கட்பிறப்பினராய்க் கூறி, தமக்கு முற்பட்ட காலத்தவரை உலகின் கீழ்ப்பாதலத்து உறைவோராய்க் கூறியிருக்கின்றனர். சோழர் தலைநகராகிய காவிரிப்பூம்பட்டினத்தின் தொன்மையையும், செல்வப் பெருக்கையும் குறித்தற், இளங்கோவடிகள், "நாக நீணகரொடு நாக நாடதனொடு, போகநீள் புகழ் மன்னும் புகார் நகர்" என்று கூறுவர். ஆகலின், ஆயிரத்தெண்ணூறாண்டுகளின்

முன்பிருந்த தமிழரது நினைப்பில் நாகரினும் தொன்மையான நாடாண்டோர் உண்டென்ற கொள்கையிருந்ததாக் கொள்ளுதற்கில்லை" என்பன.

இவையெல்லாம் சரித்திவுண்மை நிறைந்த கூற்றுக்கள் என்பதில் ஐயமில்லை, மேற்காட்டியவற்றிலிருந்து, நாகரென்பார் இந்திய நாட்டிலும், இந்தியாவின் தெற்கிலும் கிழுக்கிலும் உள்ள தீவுகளிலும் மிகப்பழைய நாளில் வாழ்ந்து வந்த மக்களென்பதும், சூரிய சந்திர குலத்துப் பேரரசராயினரும் இவ்வகுப்பினருடன் கல்யாணத்தாற் கலந்திருக்கின்றனரென்பதும் இன்னவர் நாகரிகத்தில் மிக மேன்மையுற்றிருந்தவர் என்பதும் நன்கு வெளியாதல் காண்க. இங்ஙனம் பல்வேறிடங்களில் வாழந்துவந்தவர்கள் நாகர் என்னும் ஒரே பெரால் வழங்கப்படிருப்பினும், அவரெல்லாம் நாகரிகம் மிக்குடையார் என அறியப் படினும் அவர்களுக்குள் எவ்வகைப்பிரிவும் இல்லை அவர்கள் ஒழுக்கங்களில் ஏற்றத்தாழ்வில்லை என்று கூறுதல் தலைமையானது. காவிரிப் பூம்பட்டினத்திலிழருந்த சாதுவன் என்னும் வணிகன் கப்பலேறிப் பொருள் தேடச் செல்லுங்கால் இடையே கப்பலுடைந்து நிற்க , ஒருவாறு உயிர் பிழைத்து அருகிலுள்ள நாகர் மலையை அடைந்து, அங்குள்ள நக்க சாரணர் என்னும் நாகர்களுக்கு நல்லறிவு கூறி அவர்களைத் தீ நெறியினின்றும் நீங்குவித்து மீண்டனன்; என மணிமேகலை கூறுவதாலும் இஃதறியலாகும். எனினும், புத்த மதத்தின் மேன்மையை உணர்த்து வதற்குப் பிரைச் சிறிது தாழ்த்துக் கூறியிருப்பதாக இவ்விடத்துக் கருதுதலும் இழுக்கன்று.

நாகநாடு, நாகபுரம், நாகர்மலை, என்ற இடங்கள் மணிமேகலையிற் கூறப்பட்டுள்ளன. நாகநாடானது, "கீழ் நில மருங்கின் நாகநாடு" என்றும், "நாக நன்னாட்டு நானுறி யோசனை" என்றும் கூறப்பட்டிருத்தலின் அஃது இந்தியாவின் கிழக்கேயுள்ள ஓர் பெரிய நிலப்பரப்பு என்பது பெறப்படும், ஒருகால் அது நாகப்பட்டினத்தைத் தொடர்நது கிழக்கேயிருந்து கடல் கொள்ளபட்டிருப்பினும் இருக்கலாம். சோழனொருவனை மணம் புணர்நத பீலிவளையின் தந்தையாகிய வளைவணன் என்னும் அரசனால் ஆளப்ட்டது நாக நாடு என்பது முற்கூறிய நாக நாடோ, பிறிதொன்றோ தெரியவில்லை. நாகபுரம் என்பது தெற்கிலுள்ள தீவாகிய சாவக (ஜாவா) நாட்டின் தலைநகர்; **இந்திரன்** குலத்தில் வந்தோரான பூமி சந்திரன், புண்ணியராசன் என்னும் வேந்தர்களுக்கு இருப்பிடமானது.

இனி, இதுகாறும் காட்டிப் போந்த வற்றுள் ஒன்றேனும் வட வேங்கடம் தென் குமரியிடைப்பட்ட தமிழகத்துள் வாழ்ந்தோரைக் குறிப்பதாகக் கொள்ளுதற்கு தவறு இல்லை. தமிழக மக்களைத் தெரிந்து கொள்வதற்குப் பழைய தமிழ் நூல்களே சிறந்த கருவியாகும். அவற்றுடன் சேர்ந்தே பிறவும் கருவியாக அமையும். ஆகவே அவற்றைத் துணையாகக்கொண்டு தமிழர் என்பவர் யார் என்று பார்ப்போம்.

ஆயுள்வேதமணி சங்கர் கோவிந்தராஜு எழுதிய இந்தியாவின் மகிமை என்பதில் அமெரிக்கா, பாதாள தேசம், நாகலேகம், பாதாளலோகமான கீழ்பூமி, என்பதாகவும் 1481ல் வடஅமெரிக்கா சின்சினாட்டி நகரத்தில் கிடைத்த சிலாசாசன்தில் இந்துகள் அங்கேயிருந்ததாகவும் காணப்படுகிறது.

(தகவல்: நாட்டாரின் கள்ளர் சரித்திரம்)